# சித்தாந்தஞான விளக்கம்

## ஞான வேது.

ஒரு நல்வினை செய்வான் தொடங்கி அறநூலை யாராய்வது உணர்வின்கண்விடயமாய் வரும் பொழுதே தம்மாற் பெறப்படும் காமியப் பயன்களை உடன் கூறிக்கொண்டே வருகின்றன வாயவேள்வி முதலிய அறங்களின் பயனாகிய வின்பம் ! முன்னர்ப் பசித்துண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வுண்டியான் வரும் இன்பத்தை யொக்கும். ஆகலான், ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்த முறுத்து தற்கண் பொன்விலங்கும் இரும்பு விலங்கும் போலத் தம்முட்சமப்படுத்து உணரப்படுவனவாகிய அறம் பாவம் இரண்டும் தம்மைப்போல் அனுபவ மாத்திரையாற் கெடுதலின்றி மேன் மேன் முறுகி வளர்வன வாயசரியை முதலியதவங்களானே நேராக வொத்தால், அத்தவமுதிர்ச்சியுடைமையான் ஞானகுருவைத் தேடி அவரைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபடுதல், சித்தாந்த ஞானிகளுடன் கலந்து கூடல், அவர்தம் திருவேடத்தையும் ஆலயத்தையும் முதல்வனெனக் கண்டுவழிபடுதல், இறைவனைத் தியானத்திலே தரிசித்தல், உடற்கண் வேர்வை யரும்புதல், கண்களில் ஆனந்தநீர் விடுதல், உடனடுங்கல், வசனங் குழறுதல், உளம் வெதும்பி மயிர்க்குச் செறிதல் முதலிய ஞானமுதிப்பதற் கேதுவாம்.

## ஞானாதாரம்.

கண்ணுக்குக் காட்டான இரவி யொளி போலவும், நிறங்களைக் கவரும் படிகத்திற்கு இரண்டையு மொன்றென்றம்படிபற்றுவிக்கும் ஆதித்தனைப் போலவும், நான்கு பூதத்திற்கும் ஆதாரமாகாய மானாற் போலவும், உடலுக் குயிர்போலவும், நாவாய்க்குச் சமுத்திரம் போலவும், புட்பத்திற்கு நீர் போலவும் ஞானம் ஆன்மாவிற் காதாரமாம். ஞான நிலை. உயிர் நீங்கக் கூடி யறியுங் கருவி நீங்குமென்றும், அறிவி ப்பான் வசமாகத்தன் செயலு மொழியு மென்றும் விவகி, அறி வின் போத பேதத்தை விட்டு அதீதத்திற் சேராமலும், கவலை யினிறங்காமலும் பலகால் தியானிக்கக் கண்ணாடியை விளக்க ஒளி மிகுதியா மாறுபோல ஞானந் தோன்றும், ஞான வளர்ச்சி. குளத்தின் நீர் பாசியால் மறைப்புண்டா லதனை யொருகல் லெறிந்த விடத்தே அப்பாசி நீங்கு மாறு போலவும், அக்கினி விளங்காத நேரத்து வாயுவை யுண்டாக்கு மாறு போலவும், புடவையை எற்றுமது போலவும், நூற்பொருளைப் பலகாலுநவிலுவதுபோலவும் திருவருளிலே'யுறைந்து சித்தாந்த மகாவாக்கியத்தை நாடோறும் பயின்று, அங்ஙனம்பயின்று வருகையில், பயிற்சி வயத்தால் முன்னர்த் தான் நோக்கிய பாசத்தை நோக்கி நிற்கும் வாசனையை நீக்குதற்குப் பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரித்துவரில் ஞானம் வளரும்.

## ஞான பேதம்.

பாசஞானம், பசுஞானம், பதிஞானமென மூன்றாம். பாசஞானமாவது ஆன்மா போகவேதுவான போது இச்சையாகப் பற்றி அறிதற் கருவியாய் அறியு மதனைப் பாசஞானமென்றறிவதாம். இதுசுடர்விளக் கிருக்கு மிடத்தினையும் விளக்கென்றாற் போலாம். பசுஞானமாவது திருவருள் காட்டக் கண்டறிந் தறிவிப்பதாம். இது குருடனுக்குக் கோல்போலாம். பதிஞான நடத்துமளவில் இறைவ னொழியப் பிரகாசிக்க மாட்டாது ஆதித்தனுக்குக் கிரணம்போல வென்று கண்டு இறைவனெல்லா வற்றிற்கும் முதலென்று காணல்.

## ஞான மகிமை.

பாசவிருத்தியில் அஞ்ஞானமும் பாசஞானமாம், அஃதனேகமாம். அவை முக்கூற்றுப்புறச்சமயஞானங்களும், சாத்திரஞானமும், சுருதிஞானமும், புராணஞானமும், சதுர்ட்டிகலாஞானமும், யோகஞானம், மாயாஞானமும், பேதஞானமும், மாயாவாதஞானமு முதலியனவாம். பசுஞானமும்பலவுள. அவை வம்வுகளைப் பற்றியும், வடிவறு திகளைப் பற்றியும், நீரும் நீருமென்றும்நட்சத்திரமு மாதித்தனுமென்றும், இரதகுளிகைபோலவென்றும் செம்பு பொன்னுமாம்பேர் லவென்றும், இறைவனே யெல்லாந் தானே யென்றும், உப்பு நீரும் போலவென்றும், இரும்பு மெரியும் போலவென்றும், எரியும் நீரும் போலவென்றம், சொல்லுமவதரமெல்லாம் ஆன்மபோதஞ் சேட்டித்தலால் இவையெல்லாம்பாசஞானமாம். பதிஞானமாவது விசாரித்துச் சொல்லவும், ஆன்மபோதத்தாற் கொள்ளவும் அரியது.

## ஞான சுகம்.

"எங்ங னிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்க னிருந்தெதென் றுந்தீபற
அறியு மறிவதன் றுந்தீபற" என்றதனாற் காண்க சுபம்.

மணவழகு.

சித்தாந்தம் - 1912 ஹு - மே மீ